எ) இருபொருள் எழுதுக.

1. திரை ____________, ____________.

2. கலிங்கம் ____________, ____________.

3. கலை ____________, ____________.

4. கவி ____________, ____________.

செயல்திட்டம் : களப்பயணம் மேற்கொள்க. (துறைமுகம்)

அறிந்துகொள்க.

நீங்கள் வாழும் நிலப்பகுதி எவ்வகைத் திணை என அறிந்துகொள்க.

திணையும் – நிலமும்

குறிஞ்சி



மலையும்
மலைசார்ந்த இடமும்

மருதம்



வயலும்
வயல்சார்ந்த இடமும்



முல்லை

காடும்
காடுசார்ந்த இடமும்

நெய்தல்



கடலும்
கடல்சார்ந்த இடமும்

பாலை



மணலும்
மணல்சார்ந்த இடமும்



# கெலன் கெல்லர்

கெலன் கெல்லர் அமெரிக்காவின் புகழ்பெற்ற எழுத்தாளராகவும் பேச்சாளராகவும் அரசியல் ஈடுபாடு கொண்டவராகவும் விளங்கினார். அவரைக் காணவந்த ஒருவர், அவரிடம், "உங்களுக்கு மிகவும் விருப்பமான ஒன்றைப் பெறவிரும்பினால், அஃது என்னவாக இருக்க வேண்டுமெனக் கேட்பீர்கள்" என்று கேட்டார்.

"இந்த உலகத்தில் அமைதி மலர வேண்டும் எனக் கேட்பேன்" – என்றார் கெலன்.

"பார்க்கும் திறனும் கேட்கும் திறனும் பேசும் திறனும் வேண்டும்" எனக் கேட்பார் என நினைத்தவருக்குப் பெருத்த ஏமாற்றம்.

ஆம், கெலன் கெல்லரின் கண்கள் பாரா; காதுகள் கேளா; வாய் பேசாது. பத்தொன்பது மாதக்குழந்தையாக இருந்தபோது ஏற்பட்ட கொடிய நோய், அவரது மூன்று புலன்களையும் பறித்துக்கொண்டது. கெலன், தன் உணர்வுகளை வெளிப்படுத்த இயலாத இருண்ட உலகில் வாழ வேண்டியதாயிற்று. ஆறு வயதானபோது அலெக்சாண்டர் கிரகாம்பெல் உதவியால் பெர்கின்ஸ் பள்ளியில் சேர்ந்தார். அங்குப் பணிபுரிந்த அன்னிசல்லிவான் என்பவர் கெலனுக்கு ஆசிரியராக வாய்த்தார்.

மூன்று புலனற்றவர் என்பது தெரிந்தும், ஆசிரியர் அன்னி, தன்னம்பிக்கையுடன் அவருக்குக் கற்பிக்கத் தொடங்கினார். அவர், முதலில் பொருள்களின் பெயரை ஒவ்வோர் எழுத்தாகக் கெலனின் உள்ளங்கையில் தம் விரல்களால் எழுதிக் கற்பித்தார்; பின்னர்க் கெலன், அன்னியின் குரல்வளையின்மீது கைவைத்து ஒலி அதிர்வுகளின்மூலம் எழுத்துகளையும் சொற்களையும் அறிந்துகொண்டார். அதன்பின் பாஸ்டனில் உள்ள ஹோரஸ்மான் காதுகேளாதோருக்கான பள்ளியிலும், நியூயார்க்கில் உள்ள ரைட் ஹூமாசன் பள்ளியிலும் முறைப்படி பயின்றார்.

---

பெர்கின்ஸ் பள்ளி: அமெரிக்காவில் பாஸ்டன் நகரில் அமைந்துள்ள பார்வையற்றோருக்கான பள்ளி



ஆசிரியர் அன்னிசல்லிவானுடன்



அலெக்சாண்டர் கிரகாம் பெல்லுடன்



பாலி தாம்சனுடன்...

பிரெய்லி முறையில் எழுதவும் படிக்கவும் கற்றார். அவர், தனக்கெனத் தனியாகத் தயாரிக்கப்பட்ட தட்டச்சு இயந்திரத்தினைப் பயன்படுத்தினார். ஆசிரியை அன்னி அளித்த பயிற்சியின் பயனாக, கேம்பிரிட்ஜ் ரெட் கிளிஃப் கல்லூரி நுழைவுத் தேர்வில் வெற்றிபெற்று, இளங்கலைப்பட்ட வகுப்பில் சேர்ந்தார்; பட்டமும் பெற்றார். இத்தகைய மாற்றுத்திறனாளர்களுள் முதன் முதலில் பட்டம் பெற்றவர் இவரே. இவர் பல நூல்களை எழுதினார்; போர்களை எதிர்த்து உலக நாடுகள் பலவற்றிற்கும் சுற்றுப்பயணம் செய்தார்.

கெலன், தனது வாழ்நாளைக் கண்ணிழந்தோர் மற்றும் காதுகேளாதோர்க்காகச் செலவிட்டார். அதற்காக, அல்லும் பகலும் அயராது உழைத்தார். அவர்களுக்கென உலகமெங்கும் பள்ளிகள் திறக்கச்செய்யும் பொருட்டு மொழிபெயர்ப்பாளர் ஒருவரின் உதவியுடன் உலக நாடுகள் பலவற்றிற்கும் சுற்றுப் பயணம் மேற்கொண்டார்; கெலன் கெல்லர் நிதி எனஒன்றனைத் தொடங்கி, அதில் சேர்ந்த தொகையான ரூபாய் ஒன்றரைக் கோடியை அப்பள்ளிகளுக்கு வழங்கினார். பார்வையற்றோருக்கெனத் தேசிய நூலகம் ஒன்றனை உருவாக்கி, உலகம் முழுவதிலும் இருந்து நூல்கள் வந்து குவிய ஏற்பாடு செய்தார். தன்னைப்போல அவர்களும் மீட்சி பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் தன் எண்பத்தெட்டு வயதுவரை அயராது உழைத்தார்.

“வாழ்க்கையில் இழப்பு என்பதே இல்லை; ஒன்றுபோனால் இன்னொன்று வரும். அந்த நம்பிக்கையிருந்தால் வாழ்க்கை வெறுமை ஆகாது” – இவ்வாறு கூறிய கெலன், அந்நம்பிக்கையை மெய்ப்பிப்பதுபோல், “நீங்கள் கண்பார்வை அற்றவராகவும், காது கேளாதவராகவும் இருந்தும்கூட எப்படி உங்களால் சாதிக்க முடிந்தது ?” எனவிக்டோரியாமகாராணி, கெலனிடம்கேட்டபொழுது, ‘அதற்குக் காரணம் என்னுடைய ஆசிரியர்தான்’ என்று கூறினார். என் மூன்று புலன்களை இழந்ததால்தான், எனக்கு அவர் ஆசிரியராகக் கிடைத்தார் எனப் பதிலளித்தார். ஆசிரியர் அன்னி இல்லாவிட்டால் கெலனை இவ்வுலகில் யாருக்கும் தெரிந்திருக்காது.

ஆசிரியர் அன்னி 1930ஆம் ஆண்டு இறந்துவிடத் தனது மொழிபெயர்ப்பாளர் பாலி தாம்சன் என்பாரின் உதவியுடன் வாழ்ந்துவரலானார்; ஜப்பான் முதலான நாடுகளுக்குச் சுற்றுப்பயணம் மேற்கொண்டார். கெலன், வாஷிங்டன் நகரின் புகழ்பெற்ற பெண்மணியாகத் திகழ்ந்தார்.

கெலன் கெல்லர், “மனிதர்கள் எல்லாவற்றையும் எளிதாக எடுத்துக்கொள்கிறார்கள்; அவர்கள் எதையுமே முதன்மையாகக் கருதுவதில்லை. எதையாவது இழந்த பிறகுதான் அதன் அருமையை உணர்கிறார்கள். மனிதர்கள் பார்த்தல், பேசுதல், தொடுதல், முகர்தல், கேட்டல் ஆகிய ஐம்புல உணர்வுகளை இயற்கையாகவே பெற்றிருக்கிறார்கள். இந்த உணர்வுகளின் மதிப்பைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் பலருக்கு இல்லை, அன்றாட வாழ்க்கைக்கு இவையெல்லாம் தேவையென்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள்,'' என்பார்.

ஒருநாள் இரவு கெலன் கெல்லர், கடவுளின் அருளால் மூன்று நாள் மட்டுமே தமக்குப் பார்வை கிட்டியதாகக் கனவு கண்டார். அதற்கே அவர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். முதல் நாள், கண்ணொளி கிடைத்ததும் முதன்முதலில் பார்த்தது அவரின் கல்விக்கண் திறந்து வைத்த ஆசிரியரின் முகத்தையே. அவரைச் சந்தித்ததற்குப் பின், தமது ஆசிரியர் பொறுமை, அன்பு, இரக்கம், துணிவு, தன்னம்பிக்கை ஆகியவற்றுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்வதை உணர்ந்தார். ஆசிரியரைப் பார்த்ததற்குப் பின் அவர், தமது உயிர்த்தோழிகளைச் சந்தித்தார். அவர்களின் கள்ளங்கபடமற்ற அழகான முகத்தைக் கண்டார்.

வீட்டிற்கு வந்து, வீட்டிலுள்ள சின்னஞ்சிறு பொருள்களையெல்லாம் ஒன்றுவிடாமல் பார்த்தார். அவற்றுள், சில வண்ணப் பொருள்களையும் சுவரில் மாட்டப்பட்டிருந்த அழகிய ஓவியங்களையும் அலமாரியில் அடுக்கி வைக்கப்பெற்றிருந்த புத்தகங்களையும் கண்கொட்டாமல் பார்த்தார். அன்றைய மாலைப்பொழுதில் வெளியில் நடந்து செல்லும்போது மரங்களின் அழகையும் இயற்கையின் அழகையும் கண்டுகளித்தார். வீட்டுக்கு வரும்வழியில் பக்கத்து வீட்டுக்காரரின் பண்ணையில் மக்கள் சிலரையும் குதிரைகளையும் கண்டார். மாலைப்பொழுதில் கதிரவன் மறையும் காட்சியைக் கண்டு மகிழ்ந்தார். வீட்டிலுள்ள மின்விளக்குகள் அவரைக் கவர்ந்தன. அவை அவருக்கு மகிழ்ச்சியைத் தந்தன. பகலில் கண்ட பல்வேறு காட்சிகளில் மனம் ஈடுபாடு கொண்டிருந்ததால், அன்றிரவு அவருக்கு ஆழ்ந்த உறக்கம் வரவில்லை.

இரண்டாவது நாள், கெலன் கெல்லர் கதிரவன் தோன்றுவதைக் கண்டார்; அன்று நியூயார்க்கிலுள்ள அருங்காட்சியகத்தைக் கண்டு, இயற்கை வரலாற்றைத் தெரிந்து கொண்டார். அருங்காட்சியகம் அவருக்கு உலக மரபியல் வளர்ச்சியை அறிந்துகொள்ளப் பேருதவியாக அமைந்ததை எண்ணி மகிழ்ந்தார். அடுத்துப் பெருநகரப் பொருட்காட்சிச் சாலைக்குச் சென்றார். அங்கு இடம்பெற்றிருந்த புகழ்பெற்ற கலைஞர்கள், லியனார் டோ டாவின்சி முதலானோர் ஓவியங்களையும் கலைப்பொருள்களையும் கண்டுமகிழ்ந்தார். பிறகு, ஒரு நாடகத்தைக் காண விரும்பினார். அதில் ஜோசப் ஜெபர்சன் நடித்த திரைப்படமொன்றைப் பார்த்தார். அதில், செகப்பிரியருடைய கதை மாந்தரின் நடிப்பு அவரைப் பெரிதும் கவர்ந்தது. நடிகர் வசனம் பேசிய முறை, உச்சரிப்பு, முகவெளிப்பாடு ஆகியவை அவர் மனத்தைவிட்டு அகலவில்லை. அன்றிரவு, அமைதியாக அவர் உறங்கினார்.

மூன்றாவது நாள், நகரின் கிழக்குப் பக்கத்திலுள்ள ஆற்றுப்பாலத்தை உற்று நோக்கினார். ஆற்றில் படகுகளையும் அதில் செல்லும் மனிதர்களையும் கண்டார். பின்பு, நியூயார்க்கில் உள்ள கம்பீரமான இரட்டைக் கோபுரக் கட்டடத்தைக் கண்டுகளித்தார். அவர், மக்களின் முகத்தில் வெளிப்படும் மகிழ்ச்சியையும் துன்பத்தையும் பார்த்துப்

புரிந்துகொண்டார்; ஐந்தாவது நிழற்சாலையிலுள்ள கடைத்தெருக்களையெல்லாம் பார்த்தார். சிறிய சுற்றுலா மேற்கொண்டார்; பூஞ்சோலைகளையும் குடிசைகளையும் தொழிற்சாலைகளையும் கண்டார். இக்காட்சி அவருக்கு ஒருபுறம் மகிழ்ச்சியையும் மறுபுறம் துன்பத்தையும் அளித்தது. கெலன் சொன்னார்: " எனது கண்கள் துக்கத்தையும் மகிழ்ச்சியையும் முதன்முதலாகக் கண்டன." அன்றைய முடிவில் ஒரு நகைச்சுவை நாடகத்தைக் கண்டார். ஏனெனில், கண் பார்வை மறைவதற்கு முன்பு, மகிழ்ச்சியான ஒன்றை மட்டுமே கண்கள் காண வேண்டுமென விரும்பினார். 'நம் உணர்வுகளுக்கு நாம் மதிப்பளிக்கவேண்டும். கடவுள் நமக்குக் கொடுத்த மிகப்பெரிய அன்பளிப்பு பார்வை. அதனை இன்னும் சற்றுநேரத்தில் இழக்கப் போகிறோம்' என்ற உணர்வோடு கற்பனை செய்து பார்த்தால், அதன் அருமையை நம்மால் உணரமுடியும். மூன்று நாளிலும் தாம் உணர்ந்தவற்றை நமக்குப் பாடமாக உணர்த்தினார். "மூன்றுநாள் பார்வை கிடைத்ததற்கே முழுப் பயனையும் என் கண்கள் கண்டன. அப்படியானால், வாழ்நாள் முழுவதும் பார்வையுள்ளவர்கள் எவ்வளவு சாதனைகள் செய்யமுடியும் என்பதை எண்ணிப் பாருங்கள்" என்பதை உணர்த்தினார்.

1880 சூன் 27இல் அமெரிக்காவிலுள்ள அலபாமா மாகாணத்தில் துஸ்கும்பியாவில் பிறந்து, சாதனையாளராகத் திகழ்ந்த கெலன், 1968ஆம் ஆண்டு சூன் முதல்நாள் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவரது உடல் வாஷிங்டனில் அன்னி, பாலி ஆகியோரது உடல்களுக்கு அருகே நல்லடக்கம் செய்யப்பட்டது.

சிறு துன்பமோ தடையோ இழப்போ ஏற்பட்டாலே மனமுடைந்து மூலையில் முடங்கிப் போகும் நமக்குக் கெலன் கெல்லரின் வாழ்க்கை வரலாறு தன்னம்பிக்கையைத் தரும் என்பதில் ஐயமில்லை. உடல்நலத்தோடு இருப்பவர்களே செய்யவியலாத அரிய சாதனைகளைப் புலன்களை இழந்த கெலன் செய்தார். அதனால் அவர் , உலகின் எட்டாவது அதிசயம் எனப் பாராட்டப் பெறுகிறார்.

பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி

– குறள், 618




பிரெய்லி

பார்வையற்றோருக்கான எழுத்துமுறையை உருவாக்கியவர்.

பார்வையற்றோருக்கான தமிழ் எழுத்துகள்

## மாதிரி வினாக்கள்

### நெடுவினாக்கள்

1. கெலன் கெல்லர் எவ்வாறு கல்வி கற்றார் ?
2. கெலன் கெல்லர், தனது கனவில் முதல் நாள் கண்ட காட்சிகள் யாவை ?

# பெயர்ச்சொல் : தொழில், பண்பு, மூவிடப்பெயர்கள்

மாதவி ஆடல் கண்டு கோவலன் மகிழ்ந்தான்.

இத்தொடரில் உள்ள பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள், தொழிற்பெயர்களை அறிவோம்.

மாதவி, கோவலன் – ஆகியன பெயர்ச்சொற்கள்

கண்டு, மகிழ்ந்தான் – ஆகியன வினைச்சொற்கள்

ஆடல் – என்பது தொழிற் பெயர்.

அறுவகைப் பெயர்ச்சொற்களுள் தொழிற்பெயரும் ஒன்று என்பதை முன்வகுப்பிலேயே கற்றிருக்கிறீர்கள். ஆடல் – என்பது ஆடுதல் என்னும் தொழிலைக் குறிப்பதால், அது தொழிற்பெயர் எனப்பட்டது.

ஆடு + அல் = ஆடல். அல் – என்பது தொழிற் பெயர் விகுதி. இவ்வாறு தொழிற்பெயரைக் குறிக்க வரும் விகுதிகள்: தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து என்பன.

வினைப்பகுதியோடு மேற்குறித்த விகுதிகளைச் சேர்த்தால் தொழிற்பெயராகும்.

(எ–டு)

| | | | |
|---|---|---|---|
| பெறுதல் | = பெறு + தல் | கோடல் | = கோடு + அல் |
| ஆட்டம் | = ஆடு + அம் | வாழ்க்கை | = வாழ் + கை |
| பறவை | = பற + வை | புளிப்பு | = புளி + பு |
| போக்கு | = போ + கு | வரவு | = வர + உ |
| தோற்றரவு | = தோற்று+அரவு | கோட்பாடு | = கோள் + பாடு |
| பாய்த்து | = பாய் + து. | கேளானை | = கேள்+ஆனை |

### தொழிற்பெயர் வகைகள்

தொழிற்பெயர் இரண்டு வகைப்படும்.

1. முதனிலைத் தொழிற்பெயர்  2. முதனிலை திரிந்த தொழிற்பெயர்

### 1. முதனிலைத் தொழிற்பெயர்

தொழிற்பெயர் விகுதிகளே இல்லாமல், பகுதி மட்டும் வந்து, தொழில்புரிவதற்கு முதனிலைத் தொழிற்பெயர் எனப் பெயர்.

(எ–டு) கபிலனுக்கு அடிவிழுந்தது.

இத்தொடர்களில் அடி, என்பது விகுதிபெறாமல், பகுதியாய் நின்று தொழிலை உணர்த்துகிறது.

### 2. முதனிலை திரிந்த தொழிற்பெயர்

தொழிற்பெயரின் முதனிலையாகிய பகுதி திரிந்து வருவது முதனிலை திரிந்த தொழிற்பெயராகும்.

(எ–டு) அறிவறிந்த மக்கட் பேறு.

அவனுக்கு என்ன கேடு?

இங்குப் 'பெறு', கெடு என்னும் முதனிலைகள் 'பேறு', கேடு எனத் திரிந்து 'பெறுதல்', 'கெடுதல்' என்னும் பொருளை உணர்த்துகின்றன.

### வினையாலணையும் பெயர்

முருகன் பரிசு பெற்றான்.

பரிசு பெற்றானைப் பாராட்டினர்.

இவ்விரு தொடர்களிலும், பெற்றான் என்னும் வினைச்சொல் வந்துள்ளது.

முதல் தொடரிலுள்ள பெற்றான் என்பது, முருகன் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாக வந்துள்ளது. இரண்டாவது தொடரில் உள்ள 'பெற்றானை' என்பது முருகனைக் குறிக்கும் பெயராக வந்துள்ளது.

இவ்வாறு வினைமுற்று, வினையைக் குறிக்காமல் வினைசெய்தவரைக் குறிப்பது வினையாலணையும் பெயர் எனப்படும். இது வினைக்குரிய காலம் காட்டும்; பெயர்க்குரிய வேற்றுமை உருபுகளையும் பெற்று வரும்.

பெற்றானை – இறந்தகாலம்

பெறுகின்றானை – நிகழ்காலம்

பெறுவானை – எதிர்காலம்

பெற்றான் + ஐ என இரண்டாம் வேற்றுமை உருபு ஐ ஏற்று வந்துள்ளமை காண்க.

#### தொழிற்பெயர்க்கும் வினையாலணையும் பெயர்க்கும் உள்ள வேறுபாடுகள்

| தொழிற்பெயர் | வினையாலணையும் பெயர் |
|---|---|
| தொழிலுக்குப் பெயராய் வரும். | தொழில் செய்பவருக்குப் பெயராய் வரும். படர்க்கை இடத்தில் வரும். மூவிடங்களிலும் வரும். |
| காலங்காட்டாது. | முக்காலத்தையும் காட்டும். |

### பண்புப் பெயர்

பண்பை உணர்த்தும் பெயர் பண்புப் பெயர். அறுவகைப் பெயர்களுள் ஒன்றான பண்புப் பெயர் நிறம், சுவை, அளவு, வடிவம் ஆகியவற்றின் அடிப்படையில் தோன்றும்.

1. செம்மை, வெண்மை, கருமை – நிறப்பண்பு.
2. வட்டம், சதுரம், கூம்பு, செவ்வகம் – வடிவப்பண்பு.

3. ஒன்று, அரை, கிலோமீட்டர் – அளவுப்பண்பு.

4. காரம், புளிப்பு, இனிப்பு – சுவைப்பண்பு.

### பண்புப் பெயர் விகுதிகள்

மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர், பம், து, மன், இல் என்பன பண்புப்பெயர் விகுதிகள்.

(எ–டு)

| | | | | |
|---|---|---|---|---|
| நன்மை | = | நல் + மை | நன்றி | = நல் + றி |
| தொல்லை | = | தொல் + ஐ | நலம் | = நல் + அம் |
| மாட்சி | = | மாண் + சி | நோக்கம் | = நோக்கு + அம். |
| மாண்பு | = | மாண் + பு | திட்பம் | = திண் + பம் |
| நன்கு | = | நல் + கு | தீது | = தீமை + து. |

### வேற்றுமை உருபேற்கும்போது திரியும் பெயர்கள்

வேற்றுமை உருபுகள் ஐ, ஆல், கு, இன், அது, கண் என்பன. இவற்றைக் குறித்து முன்வகுப்பில் தெளிவாகப் படித்திருப்பீர்கள். அவை தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடப் பெயர்களை ஏற்று வரும்போது எவ்வாறு திரியும் என்பது குறித்துக் காணலாம்.

### தன்மைப் பெயர்கள்

நான், யான் என்பவை தன்மை ஒருமைப் பெயர்கள்.

நாம், யாம் என்பவை தன்மைப் பன்மைப் பெயர்கள்.

1. யான் என்னும் தன்மை ஒருமைப் பெயர் வேற்றுமை உருபேற்கும்போது என் எனத் திரியும்.

யான் —
- ஐ – என்னை
- ஆல் – என்னால்
- கு – எனக்கு
- இன் – என்னின்
- அது – எனது
- கண் – என்கண்.

2. யாம் என்னும் தன்மைப் பன்மைப் பெயர் வேற்றுமை உருபேற்கும்போது எம் எனத் திரியும்.

எம்மை, எம்மால், எமக்கு, எம்மின், எமது, எங்கண் என வரும்.

3. நாம் என்னும் தன்மை ஒருமைப் பெயர் நம் எனக் குறுகும்.

நம்மை, நம்மால், நமக்கு, நம்மின், நமது, நங்கண் எனக் குறுகி வரும்.

4. யாங்கள், நாங்கள் என்னும் தன்மைப் பன்மைப் பெயர்கள் வேற்றுமை உருபேற்கும்போது எங்கள் எனத் திரியும். எங்களை, எங்களால், எங்களுக்கு, எங்களின், எங்களது எனத் திரிந்து வரும்.

## முன்னிலைப் பெயர்கள்

நீ என்பது முன்னிலை ஒருமைப் பெயர். நீர், நீங்கள் ஆகியன முன்னிலைப் பன்மைப் பெயர்கள்.

1. நீ என்னும் முன்னிலை ஒருமைப்பெயர் வேற்றுமை உருபேற்கும்போது, நின் எனவும், உன் எனவும் மாறும்.

நீ
- ஐ – நின்னை, உன்னை
- ஆல் – நின்னால், உன்னால்
- கு – நினக்கு, உனக்கு
- இன் – நின்னின், உன்னின்
- அது – நினது, உனது
- கண் – நின்கண், உன்கண்

2. நீர் என்னும் முன்னிலைப் பெயர் வேற்றுமை உருபேற்கும்போது நும், உம் எனத் திரியும்.

நும்மை, நும்மால், நுமக்கு, நும்மின், நுமது, நும்கண்; உம்மை, உம்மால், உமக்கு, உம்மின், உமது, உம்கண்.

3. நீங்கள் என்னும் முன்னிலைப் பன்மைப் பெயர் வேற்றுமை உருபேற்கும்போது, நுங்கள், உங்கள் என மாறுபடும்.

நுங்களை, நுங்களால், நுங்களுக்கு, நுங்களின், நுங்களது; உங்களை, உங்களால், உங்களுக்கு, உங்களின், உங்களது.

## படர்க்கைப் பெயர்கள்

தான், தாம், தாங்கள் என்னும் படர்க்கைப் பெயர்கள் வேற்றுமை உருபேற்கும்போது கீழ்க்காணுமாறு திரியும்.

1. தான் என்னும் படர்க்கை ஒருமைப்பெயர் வேற்றுமை உருபேற்கும்போது, தன் என மாறும்.

தான்
- ஐ – தன்னை
- ஆல் – தன்னால்
- கு – தனக்கு
- இன் – தன்னின்
- அது – தனது
- கண் – தன்கண்

2. தாம் என்னும் படர்க்கைப் பன்மைப் பெயர் தம் எனத் திரிந்து வேற்றுமை உருபேற்கும்.

தம்மை, தம்மால், தமக்கு, தம்மின், தமது, தங்கண்

3. தாங்கள் என்னும் படர்க்கைப் பெயர் தங்கள் எனத் திரியும்.

தங்களை, தங்களால், தங்களுக்கு, தங்களின், தங்களது, தங்கண்

தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்
நீர் என்எம் நின்னும் ஆம்பிற
குவ்வின் அவ்வரும், நான்கு ஆறு இரட்டல் – நன்னூல், 247

பயிற்சி :

1. பொருந்தாத சொல்லை வட்டமிடுக.

அ) பெறு, விடு, நடு, கெடு, பொறு, உறு.

ஆ) செம்மை, வட்டம், ஒன்று, கருமை, வெம்மை.

இ) ஆடல், அண்ணன், தேடல், தம்பி, போக்கு, பாய்த்து,

2. நீ என்னும் முன்னிலைப்பெயர் வேற்றுமை உருபுகளை ஏற்கும்போது அடையும் மாற்றத்தை எழுதுக.

நீ + ஐ = நின்னை, நீ + ஆல் ____________ , நீ + ____________ ,
நீ + ____________, நீ + ____________ , நீ + ____________ .

## மாதிரி வினாக்கள்

அ) புறவயவினாக்கள்

1. உரிய விடையைத் தேர்ந்தெழுதுக.

1. தொழிற்பெயரின் பகுதி திரிந்து வரும் பெயர் ________.

அ) விகுதிபெற்ற தொழிற்பெயர் இ) முதனிலை திரிந்த தொழிற்பெயர்

ஆ) முதனிலைத் தொழிற்பெயர்

2. காட்சி என்னும் தொழிற்பெயர் ________ எனப் பிரியும்.

அ) கா + சி இ) காட் + சி

ஆ) காண் + சி

3. மாட்சி என்பது ________ ஆகும்.

அ) தொழிற்பெயர் இ) பண்புப் பெயர்

ஆ) வினையாலணையும்பெயர்

4. ‘வந்தான்’ என்னும் வினைமுற்று ________ என வினையாலணையும் பெயராய் வரும்.

அ) வருவான் இ) வந்தவன்

ஆ) வாரான்

## 2. பொருத்துக.

தொழிற் பெயர் – நன்றி

முதனிலை திரிந்த தொழிற்பெயர் – அகழ்வார்

பண்புப் பெயர் – சூடு

வினையாலணையும் பெயர் – வருதல்

## 3. கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. பகுதி மட்டும் தொழிலைக் குறிப்பது ________ .

   அ) முதனிலை திரிந்த தொழிற்பெயர் இ) முதனிலைத் தொழிற்பெயர்
   ஆ) பண்புப் பெயர்

2. தொண்டு என்னும் தொழிற்பெயரின் விகுதி ________ .

   அ) டு ஆ) உ இ) எதுவுமில்லை

3. வட்டம் என்பது ________ பெயர் ஆகும்.

   அ) அளவுப்பண்பு ஆ) சுவைப்பண்பு இ) வடிவப்பண்பு

4. வினையாலணையும் பெயர் வேற்றுமை உருபுகளை ________ வரும்.

   அ) ஏற்று ஆ) ஏற்காமல் இ) இரண்டுமில்லை

5. ‘நீ’ எனும் முன்னிலைப் பெயர் உருபேற்கும்போது ________ எனத் திரியும்.

   அ) நம் ஆ) தன் இ) உன்

## ஆ) சிறுவினாக்கள்

1. தொழிற்பெயர் என்பது யாது? எடுத்துக்காட்டுத் தருக.
2. தொழிற்பெயர் விகுதிகளில் நான்கனை எடுத்துக்காட்டுடன் எழுதுக.
3. முதனிலை திரிந்த தொழிற்பெயர் என்றால் என்ன? எடுத்துக்காட்டுத் தருக.
4. பண்புப்பெயர் என்றால் என்ன? எடுத்துக்காட்டுத் தருக.
5. தொழிற்பெயருக்கும் வினையாலணையும் பெயருக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?
6. வேற்றுமை உருபுகள் யாவை?
7. மூவிடப் பெயர்கள் யாவை?

## வகுப்பறைத்திறன்கள்

**எழுதுதல் திறன் :** படம் பார்த்துக் கவிதை வரைக.



**குழுக் கலந்துரையாடல் :**

பாரதியார் – பாரதிதாசன் – கண்ணதாசன் கவிதைகளில் சமூக மாற்றம் குறித்துக் கலந்துரையாடுக.

## மொழித்திறன் பயிற்சி

**தொகைச்சொற்களை விரித்தெழுதுதல்.**

(எ–டு) : ஐந்திணை என்னும் சொல் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐந்துதிணைகளின் தொகுப்பு.

1. முக்கனி – மா, பலா, வாழை
2. நாற்படை – தேர், யானை, குதிரை, காலாள்
3. ஐந்திலக்கணம் – எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி
4. அறுசுவை – இனிப்பு, கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, துவர்ப்பு

**பயிற்சி : தொகைச்சொற்களை விரித்தெழுதுக.**

இருதிணை ________ , ________ .

முப்பால் ________ , ________ , ________ .

நாற்றிசை ________ , ________ , ________ , ________ .

ஐம்பால் ________ , ________ , ________ , ________ , ________ .

**தமிழ் எண்ணுப் பெயர்களை எண்களுடன் பொருத்துக.**

| எண்ணுப் பெயர் | – | எண் |
|---|---|---|
| எண்பத்திரண்டு | – | உ ௫ |
| தொண்ணூற்றொன்பது | – | ௱ ௦ |
| இருபத்தைந்து | – | ௬ ௬ |
| பதினைந்து | – | அ உ |
| முப்பது | – | க ௫ |

**செயல் திட்டம் :**

1. நும் பாடப்பகுதியிலுள்ள பெயர்ச்சொற்களைத் தொகுக்க.
2. தொகுத்த பெயர்ச்சொற்களிலுள்ள தொழிற்பெயர்களை வட்டமிடுக.

**கட்டுரைப் பயிற்சி :** மாற்றுத்திறனாளர் மறுவாழ்வு.

## கையெழுத்து இதழ் தயாரித்தல்

( மாணவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்பக் குழுக்களாகப் பிரித்துக் கையெழுத்து இதழ் தயாரிக்கச் செய்தல் )

### விடுதலைத் திருநாள் சிறப்பிதழ்

அனைவருக்குமான விடுதலை! | | உலகத்தை உயர்த்தும் நன்றாய்!

| சிறப்புச் செய்தி | கவிதை | நேர்காணல் |
|---|---|---|
| விடுதலை நாள் | போரிடும் உலகத்தை வேரொடும் சாய்ப்போம். | விடுதலைக்கு உழைத்தோர் |
| **நாடகம்** | **துணுக்குகள்** | **கட்டுரை** |
| விடுதலைப்போர் | விழிப்புணர்வு ஊட்டும் நகைச்சுவைத் துணுக்குகள் | விடுதலைத் திருநாள் போட்டியில் வெற்றி பெற்ற கட்டுரை |
| **சிறுகதை** | | **உரையாடல்** |
| ஒருபக்க அளவு<br>சிறுவர் கல்வி | | காந்தி இன்று இருந்தால்...<br>இருவர்/மூவர் உரையாடல் |

இத்திங்களுக்குரிய தமிழ்மன்ற நிகழ்ச்சிகள்

## வாழ்க்கைத் திறன்

### பிறர் நிலையில் தன்னை வைத்துப் பார்த்தல்

தொடர்வண்டியில் பயணம் செய்யும்போது பார்வையற்றோர் பாட்டுப்பாடிச் செல்வதைக் கேட்டிருப்பீர்கள். முன்னே செல்பவரைப் பின்பற்றி மற்றையோர் தொடர்வதையும் கண்டிருப்பீர்கள். வழியறிந்த மாற்றுத்திறனாளி வழியறியா மற்றொரு மாற்றுத்திறனாளிக்கு உதவும்போது, பார்வையுள்ளோர் யாராவது அவர்களுக்கு உதவியதைப் பார்த்திருக்கிறீர்களா ? இயலாதோருக்கும் இல்லாதோருக்கும் மனிதநேயத்தோடு உதவுவோர் சிறந்த மனிதராவர்.

1. மாற்றுத்திறனாளிகளுக்கு எவ்வெவ் வகையில் உதவலாம் ?
2. நீங்கள் பழகிய இடத்தில் கண்ணைக் கட்டிக்கொண்டு ஒரு பொருளை எடுக்க முயற்சி செய்யுங்கள். உங்கள் பட்டறிவை நண்பர்களுடன் கலந்துரையாடுக..

## மதிப்புக்கல்வி

### உயிர் இரக்கம்

ஸ்டீன்மெட்ஸ் எனும் புகழ்பெற்ற அறிவியல் அறிஞரின் வீட்டிற்கு, அவருடைய நண்பர் சென்றிருந்தார். அன்றைக்குக் கடும் குளிர் நிலவியது. அறிவியல் அறிஞர், தம் உடலை நன்றாகக் கம்பளியால் போர்த்தியிருந்தார். எனினும், குளிர் தாங்காமல் நடுங்கிக்கொண்டே ஏதோ ஒரு சோதனையில் முழுமூச்சாய் ஈடுபட்டிருந்தார். அருகிலேயே கணப்புப்புரை இருந்தும், அவர் அதை எரிய விடவில்லை.

நண்பர் அவரிடம், "ஏன் கணப்பை எரியவிடாமல் இப்படிக் குளிரில் நடுங்குகிறீர்கள்?'' என்று கேட்டார். அதற்கு, அந்த அறிவியல் அறிஞர் எழுந்து சென்று, அருகில் இருந்த கணப்பைச்சுட்டிக் காட்டினார். அங்குச் சுண்டெலியொன்று தன்னுடைய குஞ்சுகளுடன் இருந்தது.

"இந்தக் கடுமையான குளிரில் நாமே நடுங்கும்போது பாவம் இவை என்ன செய்யும்? அதனால்தான், அவற்றை விரட்ட எனக்கு மனம் வரவில்லை." என்றார்.

இந்தச் சூழலில் நீயாக இருந்திருந்தால் என்ன செய்திருப்பாய்? நினைத்துப் பார்.

மண்ணுல கதிலே உயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை ஒருசிறி தெனினும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கணமும்நான் சகித்திட மாட்டேன். – வள்ளலார்

**மொழியாக்கம் செய்க.**

Mother Teresa, born in Yugoslavia became a nun at the age of 18. She came to India and started her career as a teacher. She established the "Home for dying and destitute" in Kolcutta. "Service to the uncared is the service to God" is the principle of Mother Teresa. The highest honour of 'Nobel Prize' was awarded her selfless work for peace.

**இணையான தமிழ்ப் பழமொழியை எழுதுக.**

1. Who hath God, Hath all, who hath him not, had less than nothing.
2. He that imagines he hath knowledge enough hath none. Knowledge is no burden.
3. In a fiddler's house all are dancers.
4. No man can flay a stone.
5. Difficulties give way to diligence.
6. Things at the worst sometime mend. In the end, things will mend.
7. A jest driven too far brings home late.
8. Command your man and do it yourself.
9. A man of courage never wants weapons.
10. If you wish good advice consult an old man.

# திருக்குறள்

## கேள்வி

### ( சான்றோர் உரைகளைக் கேட்டல் )

1. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. *

பொருள் : செல்வங்களுள் சிறந்தது கேள்விச் செல்வம். அதுவே செல்வங்கள் அனைத்திலும் முதன்மையானது.

சொற்பொருள் : செவிச்செல்வம் – கேள்விச்செல்வம்; தலை – முதன்மை.

2. செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். *

பொருள் : செவிக்குணவாகிய நல்லறிவு கிடைக்காதபொழுதில் வயிற்றுக்கும் சிறிதளவு உணவு அளிக்கப்படும்.

சொற்பொருள் : போழ்து – பொழுது; ஈயப்படும் – அளிக்கப்படும்.

இலக்கணக்குறிப்பு : வயிற்றுக்கும் – இழிவுசிறப்பும்மை.

பிரித்தறிதல் : செவிக்குணவு = செவிக்கு + உணவு.

( இவ்விரு குறட்பாக்களும் கேள்வியின் சிறப்பினைக் கூறுகின்றன. )

3. செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.

பொருள் : செவி உணவாகிய கேள்வியினை உடையவர் இவ்வுலகில் வாழ்ந்தாலும், அவி உணவைக் கொள்ளும் தேவர்களுக்கு நிகராவர்.

சொற்பொருள்: அவி உணவு – தேவர்களுக்கு வேள்வியின்பொழுது கொடுக்கப்படும் உணவு. ஆன்றோர் – கல்வி, கேள்வி, பண்பு ஆகியவற்றில் சிறந்தோர்; ஒப்பர் – நிகராவர்.

( இக்குறள் கேள்வி அறிவுடையவரின் சிறப்பினைக் கூறுகிறது. )

4. கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்(கு)
ஒற்கத்தின் ஊற்றாந் துணை. *

பொருள் : ஒருவன் கற்க வாய்ப்பு இல்லாமல் இருந்தாலும் கற்றாரிடம் கேட்டறிய வேண்டும். வாழ்க்கையில் தளர்ச்சியுறும்போது அக்கேள்வியறிவு அவனுக்கு ஊன்றுகோல்போலத் துணையாக நிற்கும்.

சொற்பொருள் : ஒற்கம் – தளர்ச்சி; ஊற்று – ஊன்றுகோல்.

இலக்கணக்குறிப்பு : கேட்க – வியங்கோள் வினைமுற்று.

பகுபத உறுப்பிலக்கணம் : கேட்க – கேள் (ட்) + க. கேள் – பகுதி; ள் – ட் ஆனது விகாரம்; க – வியங்கோள் வினைமுற்று விகுதி.

5. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.

பொருள் : வழுக்குகின்ற நிலத்தில் ஊன்றுகோல் உதவுவதுபோல, நல்லொழுக்கம் மிக்க பெரியோரின் வாய்ச்சொற்கள் வாழ்க்கைக்கு என்றும் உதவும்.

சொற்பொருள் : ஊற்றுக்கோல் – ஊன்றுகோல்; அற்றே – போன்றதே.

இலக்கணக்குறிப்பு : இழுக்கல், ஒழுக்கம் – தொழிற்பெயர்கள்; ஊற்றுக்கோல் – ஊன்றுகோல் என்பதன் வலித்தல் விகாரம்.

6. எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். *

பொருள் : எவரும் அறிஞரின் நல்லுரைகளைக் கேட்கவேண்டும். அந்நல்லுரை எவ்வளவு சிறிதேயாயினும் அதனைப் பின்பற்றுபவருக்கு நிறைந்த பெருமையை அது தேடித் தரும்.

சொற்பொருள் : எனைத்தானும் – எவ்வளவு சிறிதாயினும்; அனைத்தானும் – கேட்ட அத்துணை அளவிலும்; ஆன்ற – நிறைந்த.

இலக்கணக்குறிப்பு : ஆன்ற – பெயரெச்சம்.

7. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்(து)
ஈண்டிய கேள்வி யவர்.

பொருள் : நுட்பமாக ஆய்ந்தறிந்த கேள்வி அறிவுடையோர், தவறாக உணர்ந்திருந்தாலும் ஒருபொழுதும் இழிசொற்களைக் கூறமாட்டார்.

சொற்பொருள் : பிழைத்துணர்ந்தும் – தவறுகளை உணர்ந்தபொழுதும்; பேதைமை – அறியாமையின்பாற்பட்ட இழிசொற்கள்; இழைத்துணர்ந்து – நுட்பமாக ஆராய்ந்து; ஈண்டிய – ஆய்ந்தறிந்த.

பகுபத உறுப்பிலக்கணம் : உணர்ந்து – உணர் + த் (ந்) + த் + உ. உணர் – பகுதி; த் – சந்தி; த் – ந் ஆனது விகாரம்; த் – இறந்தகால இடைநிலை; உ– வினையெச்ச விகுதி.

(நான்குமுதல் ஏழுவரையிலான குறள்கள் கேள்வியின் நன்மைகளைக் கூறுகின்றன.)

8. கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

பொருள் : கேள்வியால் துளைக்கப்படாத செவிகளுக்குக் கேட்கும் தன்மை இருப்பினும் கேளாத செவிகளாகவே கருதப்படும்.

சொற்பொருள் : தகையவே – தன்மையதே; தோட்கப்படாத – துளைக்கப்படாத.

இலக்கணக்குறிப்பு : கேளாத் தகையவே – ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.

9. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது.

பொருள் : நுட்பமாகிய கேள்வியறிவு இல்லாதவர் பணிவான சொற்களைப் பேசுவதில்லை.

சொற்பொருள் : நுணங்கிய – நுட்பமாகிய; வணங்கிய – பணிவான; வாயினராதல் – மொழியினை உடையவர்.

10. செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். *

பொருள் : கேள்வியின் வாயிலாகச் செவிச்சுவை உணராது, உணவின் வாயிலாக வாய்ச்சுவை மட்டுமே உணரும் மக்கள் இறந்தாலும் என்ன ? வாழ்ந்தாலும் என்ன ?

சொற்பொருள் : வாயுணர்வின் மாக்கள் – உணவுச்சுவை மட்டும் அறிந்தோர்; அவியினும் – இறந்தாலும்.

இலக்கணக்குறிப்பு : அவியினும் வாழினும் – எண்ணும்மை.

பிரித்தறிதல்: சுவையுணரா = சுவை + உணரா; வாயுணர்வு = வாய் + உணர்வு.

(இறுதி மூன்று குறட்பாக்களும் கேளாதவழி ஏற்படும் குற்றங்கள்பற்றிக் கூறுகின்றன.)

## மாதிரி வினாக்கள்

அ) புறவய வினாக்கள்

1. உரிய விடையைத் தேர்ந்தெழுதுக.

1. செவிக்குணவாவது ________________.

அ) புகழ் ஆ) கேள்வி இ) மகிழ்ச்சி

2. ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் ________________.

அ) ஊற்றுக்கோல் ஆ) அளவுகோல் இ) துலாக்கோல்

2. சீர் மோனைச்சொற்களை எடுத்தெழுதுக.

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்

3. இடம் மாறியுள்ள சீர்களை முறைப்படுத்துக.

அனைத்தானும் ஆன்ற தரும் பெருமை
நல்லவை எனைத்தானும் கேட்க

4. அகரமுதலி பார்த்துப் பொருளறிக.

ஒற்கம், ஆன்ற, நுணங்கிய

## ஆ) குறுவினாக்கள்

1. தலையாய செல்வம் எது ?
2. கேள்வியுடையாரின் சிறப்பு யாது ?
3. ஒற்கத்தின் ஊற்றாம் துணை எது ?
4. கேள்வியால் தோட்கப்படாத செவி எத்தன்மையது ?
5. பணிவான சொற்களைப் பேசாதவர் யார் ?

## இ) சிறுவினாக்கள்

1. கேள்வியின் சிறப்பாக வள்ளுவர் கூறுவன யாவை ?
2. கேள்விச்செல்வத்தினால் பெறப்படும் நன்மைகள் யாவை ?
3. கேள்விச்செல்வம் பெறாததால் ஏற்படும் குற்றங்கள் யாவை ?

## ஈ) நெடுவினா

செவிச்செல்வம் பற்றி வள்ளுவரின் கருத்துகளைத் தொகுத்துரைக்க.

### உடைமைகள் பத்து

திருக்குறளில் பத்து அதிகாரப் பெயர்கள் உடைமை என்னும் சொல்லில் அமைந்துள்ளன.

1. அன்புடைமை
2. அடக்கமுடைமை
3. ஒழுக்கமுடைமை
4. பொறையுடைமை
5. அருளுடைமை
6. அறிவுடைமை
7. ஊக்கமுடைமை
8. ஆள்வினையுடைமை
9. பண்புடைமை
10. நாணுடைமை

### குறளும் ஏழு என்னும் எண்ணுப்பெயரும்

திருக்குறளுக்கும் ஏழு என்னும் எண்ணிற்கும் பெரிதும் தொடர்புள்ளது. திருக்குறள் ஏழு சீர்களால் அமைந்த வெண்பாக்களைக் கொண்டது. ஏழு என்னும் எண்ணுப்பெயர் எட்டுக் குறட்பாக்களில் இடம்பெற்றுள்ளது. அதிகாரங்கள், 133. இதன் கூட்டுத்தொகை ஏழு.மொத்த குறட்பாக்கள் 1330. இதன் கூட்டுத்தொகையும் ஏழு.

# சீட்டுக்கவி

(புலவர், பெரும்பாலும் அரசர் முதலான கொடையாளர்களுக்குத் தாம் விரும்பும் பொருளைப்பெறவேண்டி, ஓலைச்சீட்டில் கவியாக எழுதி அனுப்புவர். அக்கவிதைக்குச் சீட்டுக்கவி என்பது பெயர். இதற்கு ஓலைத்தூக்கு, ஓலைப்பாசுரம் என்னும் வேறு பெயர்களும் உண்டு. )

ஏடாயிரங் கோடி எழுதாது தன்மனத்(து)
எழுதிப் படித்த விரகன்
இமசேது பரியந்த மெதிரிலாக் கவிவீர
ராகவன் விடுக்கு மோலை
சேடாதி பன்சிரமசைத்திடும் புகழ்பெற்ற
திரிபதகை குலசே கரன்
தென்பாலை சேலம் புரந்துதா கந்தீர்த்த
செழியனெதிர் கொண்டு காண்க;
பாடாத கந்தருவம் எறியாத கந்துகம்
பத்திகோ ணாத கோணம்
பறவாத கொக்கனற் பண்ணாத கோடைவெம்
படையிற் றொடாத குந்தம்
சூடாத பாடலம் பூவாத மாவொடு
தொடுத்து முடியாத சடிலம்
சொன்னசொற் சொல்லாத கிள்ளையொன் றெங்கும்
துதிக்கவர விடல் வேண்டுமே.

– அந்தகக்கவி வீரராகவர்

பொருள் : கணக்கற்ற நூல்களைக் கையினால் சுவடியில் எழுதாது, தன் மனத்திலேயே எழுதி, அவற்றைத் தெளிவாகக் கற்ற திறமையுடையவனும், இமயம் முதல் சேதுவரையுள்ள இத்திருநாட்டில் தனக்கு நிகர் எவருமிலாத கவிஞனாகிய வீரராகவன் எழுதி விடுக்கும் ஓலை :

ஆயிரம் தலைகளையுடையவன் ஆதிசேடன்; அவன் கேட்டு இன்புற்று மெய்ம்மறந்து தலையசைக்குமாறு செய்யும் கலைக்கு இருப்பிடமானவன் குலசேகரன். அவன், கங்கர் குலத்தில் தோன்றிய தலைவன்; தெற்கிலுள்ள பாலைக்காடுமுதல் சேலம்வரையிலுள்ள நாட்டினை மக்கள் குறைதீர்த்து நலம் செய்தவன். இத்தகு பெருமைகளுக்கு உரிய செழியதரையன் இவ்வோலையைப் பெற்றுப் பிரித்துக் காண்பானாக.

பாட்டிசைக்காத கந்தருவம் (இசை), எறியமுடியாத கந்துகம் (பந்து), கூர்மை மழுங்காத கோணம் (வாட்படை), பறக்காத கொக்கு, அனல் வீசாத கோடை (வேனிற்காலம்), கொடிய படைக்கலம்போன்று பிடியாத குந்தம் (சூலம்), அணியாத பாடலம் (பாதிரிப்பூ), பூவாத மா (மாமரம்), மலர்மாலை அணியாத சடிலம் (சடை), சொல்லியதைத் திருப்பிச் சொல்லாத கிள்ளை (கிளி) ஒன்றைக் காண்போர் எல்லாம் புகழுமாறு அனுப்பி வைக்க வேண்டுகிறேன்.

பாடல் நயம் : கந்தருவம், கந்துகம், கோணம், கொக்கு, கோடை, குந்தம், பாடலம், சடிலம், கிள்ளை என்பன குதிரையைக் குறிக்கும் பல பெயர்கள். ( இதனை இலக்கணத்தார் ஒருபொருள் குறித்த பலசொற்கள் என அழைப்பர்.) ஒவ்வொரு சொல்லும் தனித்த பொருளையுடையதெனினும் அதற்குரிய அடையை நீக்கிப் பொருள்கொள்ளும்போது, அது குதிரையைக் குறிப்பதாகவே உள்ளது. இச்சொல்லாட்சித்திறன் அந்தகக்கவி வீரராகவரின் மொழிவளத்தைக் காட்டுகிறது.

சொற்பொருள் : கந்துகம் – பந்து; கோணம் – வாட்படை; குந்தம் – சூலம்; கோடை – வேனிற்காலம்; பாடலம் – பாதிரிப் பூ; மா – மாமரம்; சடிலம் – சடை; கிள்ளை – கிளி.

இலக்கணக்குறிப்பு : எழுதி, புரந்து – வினையெச்சங்கள்; படித்த, தீர்த்த – பெயரெச்சங்கள்; பாடாத, பறவாத, சூடாத – எதிர்மறைப் பெயரெச்சங்கள்; எதிரிலா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; விடல் – தொழிற்பெயர்.

ஆசிரியர் குறிப்பு : அந்தகக்கவி வீரராகவர் காஞ்சிபுரம் மாவட்டத்துப் பூதூரில் பிறந்து, பொன்விளைந்த களத்தூரில் வாழ்ந்தவர். இவரின் தந்தையார் வடுகநாதர். வீரராகவர் பிறவியிலேயே கண்ணொளி இழந்தவர்; எனினும், கேள்வியறிவின் வாயிலாகக் கல்வி பயின்றார். இவர், ஏடுகள் எழுதாமல், தன் மனத்திலேயே எழுதிப் படித்தேன் எனத் தானே கூறுவதிலிருந்து, அவர் கற்பதற்கு எடுத்துக்கொண்ட முயற்சியை எண்ணி வியக்கத் தோன்றுகிறது. வள்ளல்கள்மீதும் சிற்றரசர்கள்மீதும் பல தனிப்பாடல்களைப் பாடிப் பரிசுகள் பெற்றார். இலங்கை சென்று பரராசசேகர மன்னனைப் பாடி ஒரு யானை, பொற்பந்தம், ஓர் ஊர் ஆகியவற்றைப் பரிசிலாகப் பெற்று ஊர் திரும்பினார். இதனால், இவர்தம் புகழ் கடல்கடந்தும் பரவிற்று. இவரது பாடல்கள் தனிப்பாடல் திரட்டில் இடம்பெற்றுள்ளன.

திருக்கழுக்குன்றப் புராணம், திருக்கழுக்குன்ற மாலை, சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், திருவாரூர் உலா, சந்திரவாணன் கோவை ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

நூற்குறிப்பு : இப்பாடல், தனிப்பாடல் திரட்டு எனும் நூலில் இடம்பெற்றுள்ளது. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த புலவர் பலர் பாடிய பாடல்களின் தொகுப்பே இந்நூல். இதில் நூற்றுப் பத்துப் புலவர்கள் பாடிய ஆயிரத்து நூற்றுப் பதின்மூன்று பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அந்தகக்கவி வீரராகவர் இயற்றிய முப்பத்தொன்பது பாடல்கள் இதில் இடம்பெற்றுள்ளன. சேலத்து வேந்தன் செழியதரையனுக்குக் குதிரை வேண்டி அந்தகக்கவி வீரராகவர் எழுதி அனுப்பிய பாடல் இது.

## மாதிரி வினாக்கள்

### அ) புறவயவினாக்கள்

**1. கோடிட்ட இடங்களை நிரப்புக.**

1. வீரராகவர் எழுதிய நூல்களில் ஒன்று ____________ புராணம்.
2. செய்யுள் வடிவில் எழுதப்படும் கடிதவகை ____________ ஆகும்.
3. சீட்டுக்கவிக்கு ____________, ____________ என்னும் வேறுபெயர்களும் உண்டு.

**2. பொருத்துக**

கந்துகம் – பாதிரிப்பூ

குந்தம் – சடை

பாடலம் – பந்து

சடிலம் – சூலம்

### ஆ) குறுவினாக்கள்

1. வீரராகவர் எவ்வாறு கல்வி கற்றார்?
2. சேலத்து அரசன் செழியன் எத்தகையவன்?
3. வீரராகவர் எதை வேண்டி, யாருக்குச் சீட்டுக்கவி எழுதினார்?
4. சீட்டுக்கவி – குறிப்பு எழுதுக.

### இ) சிறுவினாக்கள்

1. குதிரையைக் குறிக்கும் வேறு பெயர்கள் யாவை?
2. அந்தகக்கவி வீரராகவர் பற்றிக் குறிப்பு எழுதுக.

### ஈ) நெடுவினா

வீரராகவர் அனுப்பிய சீட்டுக்கவியின் செய்திகளைத் தொகுத்துரைக்க.

### உ) நயம் பாராட்டுக

சீட்டுக்கவிப் பாடலின் நயத்தை விவரிக்க.



# ஆனந்தரங்கர் நாட்குறிப்பு

கல்வெட்டுகளும் செப்பேடுகளும் இலக்கியங்களும் பழங்கால வரலாற்றை அறிய உதவும் காலக் கண்ணாடிகள். ஆனால், ஒரு நாட்குறிப்பு அக்கால நிகழ்வுகளை நமக்கு எடுத்துரைக்கும் வரலாற்று ஆவணமாகத் திகழ்கிறது. அதுதான் ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு.

## நாட்குறிப்பு

நாட்குறிப்பு என்பது தனிமனிதனின் ஒருநாளைய நிகழ்வுகளைப் பதிவு செய்வதற்கோ அன்றைய பணிகளைக் குறித்து வைத்துக் கொள்வதற்காக மட்டுமோ பயன்படக் கூடாது. அதனுடன், குறிப்பிட்ட நாளில் நடந்த சமூக மாற்றங்கள், அரசியல் நிகழ்வுகள், இயற்கையில் ஏற்பட்ட பேரிடர்கள், உலகின் சீரிய நிகழ்வுகள் போன்றவற்றைப் பதிவு செய்வதற்காகப் பயன்பட வேண்டும். அவ்வாறு மிகச் சிறந்த நிகழ்வுகளின் பதிவாக அமைந்ததால்தான் ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு ஓர் இலக்கியமாகவும் வரலாற்று ஆவணமாகவும் மதிக்கப் பெறுகிறது.

## இளமைக்காலம்

ஆனந்தரங்கர், சென்னைப் பிரம்பூரில் ( பெரம்பூர் ) 1709ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 30ஆம் நாள் பிறந்தார். இவர், தம் மூன்று வயதில் தாயை இழந்தார்; எம்பார் என்பாரிடம் கல்வி பயின்றார். இவரின் தந்தை திருவேங்கடம், மைத்துனர் நைனியப்பரின் வேண்டுகோளுக்கிணங்க புதுவையில் குடியேறினார். அங்கு அரசுப்பணியில் உதவியாளராகச் சேர்ந்து, நாளடைவில் திவானாகப் பதவிஉயர்வு பெற்றார்.

ஆனந்தரங்கர் கல்வி கற்றபின்னர், பாக்குக் கிடங்கு நடத்தி வந்தார். அவ்வமயம், அரசுப் பணிகள் சிலவற்றில் தந்தைக்கு உறுதுணையாக இருந்துவந்தார். துய்ப்ளெக்சு என்னும் ஆளுநரின் மொழிபெயர்ப்பாளர் ( துபாசி ) இறந்ததால், பன்மொழியறிவுபெற்ற ஆனந்தரங்கர் அப்பணிக்கு அமர்த்தப்பட்டார்.

### ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு

ஆனந்தரங்கர் துபாசியாகப் பணியாற்றிய காலத்தில், **1736**ஆம் ஆண்டு முதல் **1761** ஆம் ஆண்டுவரை ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகள் நாட்குறிப்பு எழுதியுள்ளார். தம் நாட்குறிப்புக்குத் தினப்படிச் செய்திக்குறிப்பு, சொஸ்த லிகிதம் என்றே பெயரிட்டார் ஆனந்தரங்கர். இடையில் சில நாள் எழுதப்படாமலும் சில நாள் குறிப்புகள் முழுமையின்றிக் காணப்பட்டாலும் இருபத்தைந்தாண்டுக்கால அரசியல், பொருளாதார, சமுதாய நிகழ்ச்சிகளின் பதிவேடாக இஃது அமைந்துள்ளது.

### நாட்குறிப்புச் செய்திகள்

வரலாற்றுச் செய்திகள், அரசியலமைப்பு, நிருவாகமுறை, பிரெஞ்சுப்படை காரைக்காலைப் பிடிக்கச் சென்று தோல்வியடைந்தது, தில்லியின்மீது பாரசீகப் படையெடுப்பு, குற்றவாளிகளுக்குக் கடுமையான தண்டனை வழங்கிய செய்திகள், இலபூர்தொனே கப்பல் பிரெஞ்சு நாட்டிலிருந்து சென்றது, வெளிநாட்டுப் பயணிகள் வந்துசென்ற நிகழ்வுகள் முதலிய முக்கிய வரலாற்றுச்செய்திகள் இடம்பெற்றதால், ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு ஒரு வரலாற்றுக் கருவூலமாகத் திகழ்கிறது.

### வணிகச் செய்தி

ஆனந்தரங்கர் நாட்குறிப்புகளின் பெரும்பகுதி வணிகச் செய்திகளையே விவரித்துள்ளன. துறைமுக நகரங்களில் உள்ள மக்களின் வருவாய்க்கு அடிப்படையாய் அமைவது அங்கு வரும் கப்பல்களின் போக்குவரத்தேயாகும். கப்பல் வந்தபோது வணிகம் செழிப்பதும் மக்கள் மகிழ்வதும் இயற்கை. அதேபோன்று வாராத காலத்து மக்கள் வசதிகள் குன்றித் துன்புறுவர். இதனை ஆனந்தரங்கர் தம்முடைய நாட்குறிப்பில் குறிப்பிட்டு எழுதியுள்ளார்.

புதுச்சேரிக்குக் கப்பல்கள் வந்த செய்தி கேட்டதும் மக்கள் மகிழ்ந்தனராம். அது குறித்து, நாட்பட்ட திரவியம் மீண்டும் கிடைத்தாற் போலவும், மரணமுற்ற உறவினர்கள் உயிர்பெற்று எழுந்து வந்தது போலவும், அவரவர் வளவிலே கலியாணம் நடப்பது போலவும், நீண்டநாள் தவங்கிடந்து புத்திர பாக்கியம் கிட்டினாற் போலவும், தேவாமிர்தத்தைச் சுவைத்ததுபோலவும் சந்தோஷித்தார்கள்; அதைக் காகிதத்தில் எழுத முடியாது என்று தாம் வியந்ததை நாட்குறிப்பில் எழுதி வைத்துள்ளார்.

### தண்டனை

நீதி வழங்கல், தண்டனை அளித்தல் முதலிய செய்திகளும் நாட்குறிப்பில் இடம் பெற்றுள்ளன. பிரெஞ்சுப் படையிலிருந்து ஓடிப்போன வீரன் ஒருவன் பிடிபட்டான்.

---

சொஸ்த – தெளிந்த அல்லது உரிமையுடைய என்பது பொருள். லிகிதம் – கடிதம் அல்லது ஆவணம். வளவு – வீடு; துபாசி – இருமொழிப்புலமையுடையவர் (மொழிபெயர்ப்பாளர்).

அவனைப் பதினைந்து நாள் கிடங்கில் (சிறையில்) வைத்திருந்து, பின்பு மற்றவருக்கும் பாடம் புகட்டும் வகையில் மரணதண்டனை அளிக்கப்பட்டது. வீடுகளில் தொடர்ந்து திருடிவந்த கும்பல் ஒன்று பிடிபட்டது. அவர்களுள் தலைமைத் திருடனைக் கடைத்தெருவில் தூக்கில் தொங்கவிட்டனர். ஏனைய இருவருக்கு இரண்டு காதுகளையும் அறுத்து, ஐம்பது கசையடி தரப்பட்டன. இவ்வாறு கடுந்தண்டனைகளை வழங்கியதால் குற்றங்கள் குறைந்தன என்பதை ஆனந்தரங்கரின் நாட்குறிப்பின்மூலம் அறியலாம்.

### பண்பாட்டு நிலை

ஆனந்தரங்கர், தம் நாட்குறிப்பில் தந்தைக்கும் மகனுக்கும் இடையேயான உறவு, பெரியவர்களை மதிக்கும் பண்பு, பெரியவர்களுக்கு வணக்கஞ் செய்தல், கோவில் திருவிழாக்கள், பழக்க வழக்கங்கள், சடங்குகள் எவ்வாறிருந்தன என்பதைப் பதிந்துள்ளார். சுங்குசேஷாசல செட்டியாரின் பெண்கள் இருவருக்கு நடைபெற்ற திருமண ஊர்வலத்தையும், திருமணம் நடைபெற்ற முறையையும், ஆளுநர் அத்திருமணத்திற்கு வந்திருந்ததையும் ஆனந்தரங்கர் எழுதிய நாட்குறிப்பின் வாயிலாக அறியமுடிகிறது. திருமணத்திற்கு வருகை தந்த ஆளுநர் பற்றிய செய்திகள் வருமாறு:

“இந்தக் கலியாணத்திற்கு இற்றைநாள் (9–6–1746) வியாழக்கிழமை சாயங்காலம் ஆறு மணிக்குத் துரையவர்கள், முசே துய்ப்ளே அவர்கள் பெண்சாதியும், மதாம் தெப்ரமேனி, இவர்களெல்லாம் வந்து அரை நாழிகை (12 நிமிடம்) உட்கார்ந்து, பிறகு எழுந்திருந்து வீட்டுக்குள்ளே முதல் கட்டிலே போய் மாப்பிள்ளையையும் பெண்ணையும் பார்த்துவிட்டு மறுபடியும் பந்தலிலே வந்து உட்கார்ந்து, மேசையிலே உட்கார்ந்து தித்திப்புச் சாப்பிட்டு அரை நாழிகை இருந்து, பிற்பாடு புறப்பட்டு வளவுக்குப் போய் விட்டார்கள். வருகையிலே 21, உட்காரச்சே 21, சாப்பிடச்சே 21, எழுந்திருக்கச்சே 21 சுட்டார்கள் (பீரங்கி முழங்கியது). துரையவர்கள் வந்தபடியினாலே வெகுமானப்பணம் துரையவர்களுக்கு ஆயிரம், மதாமுக்கு நூறு அந்தரங்கத்திலே கொடுத்துவிட்டுப் பந்தலிலே பாக்கு வெத்திலை பன்னீர் புஷ்பம் மாத்திரம் கொடுத்தார்கள்.”


முசே துய்ப்ளே

திருமணத்திற்கு வரும் மதிப்புமிக்கவர்களுக்குத் தரும் வெகுமானம், மரியாதை முதலியன அன்றைய நடைமுறையாக இருந்துள்ளது தெரிய வருகிறது.

### மொழியியல் செய்திகள்

ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு, அக்காலப் பேச்சுத்தமிழ், சொற்கள், சொற்றொடர்கள் மற்றும் இலக்கணக் கூறுகளை எடுத்துரைக்கின்றன. பிறமொழிகளிலிருந்து கடன்பெற்ற சொற்கள், அன்று வழங்கி, இன்று வழக்கிழந்த சொற்கள் முதலானவற்றையும் அவரது நாட்குறிப்புகள் வாயிலாக அறிய முடிகிறது.

### ஆனந்தரங்கர் பெற்ற சிறப்புகள்

பிரெஞ்சுக்காரர்களுக்கும் இந்திய மன்னர்களுக்கும் இடையே பாலமாக இருந்தவர் ஆனந்தரங்கர். முசபர்சங், ஆனந்தரங்கருக்கு 1749ஆம் ஆண்டில் மூவாயிரம் குதிரைகளை வழங்கி, அவருக்கு மன்சுபேதார் என்னும் பட்டத்தையும் வழங்கினார். பின்பு, செங்கற்பட்டுக் கோட்டைக்குத் தளபதியாகவும், அம் மாவட்டம் முழுமைக்கும் ஜாகீர்தாரராகவும் நியமனம் பெற்றார். துபாசி பணியாற்றுவோர் தமிழ் மக்களின் தலைவராக அறிவிக்கப்படுவர். எனவே, ஆனந்தரங்கர் வணிகராக, துபாசியாக இருந்தபோதிலும் மன்னரைப்போல் மதிக்கப் பெற்றார்.

துய்ப்ளே ஆட்சியில் ஆனந்தரங்கருக்குத் தனிப்பட்ட உரிமைகள் வழங்கப்பட்டிருந்தன. ஆளுநர் மாளிகைக்குள் பல்லக்கில் செல்லும் உரிமை அவருக்கு வழங்கப்பட்டிருந்தது. அவ்வாறு செல்லும்போது மங்கல ஒலிகள் ஒலிக்கும். அவர், தங்கப் பிடி போட்ட கைத்தடி வைத்துக்கொள்ளவும் செருப்பணிந்து ஆளுநர் மாளிகைக்குள் செல்லவும் உரிமை பெற்றிருந்தார். பொதுமக்கள் தொடர்பான வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் உரிமையும் அவருக்கு இருந்தது. இத்தகைய பல செய்திகள் அவரது நாட்குறிப்பில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

பன்மொழிப் புலவராகத் திகழ்ந்தாலும் ஆனந்தரங்கர் தமிழ்மொழிமீது மிகுந்த பற்றுடையவராகத் திகழ்ந்தார்; தமிழிலேயே கையெழுத்திட்டார். உலக நாட்குறிப்பு இலக்கியத்தின் முன்னோடியான பெப்பிசு என்பாரைப் போன்று, தமிழில் நாட்குறிப்பு எழுதியமையால், இவரை இந்தியாவின் பெப்பிசு எனவும், நாட்குறிப்பு வேந்தர் எனவும் போற்றுகின்றனர். தம்முடைய வாழ்க்கையைப் பிறருக்கு முன்மாதிரியாக அமைத்துக்கொண்ட ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு ஓர் இலக்கியமாகவும் வரலாற்று ஆவணமாகவும் பண்பாட்டுப் பதிவேடாகவும் உலகத்தாரின் கவனத்தை ஈர்த்துள்ளது. இவர்தம் நாட்குறிப்புக் குறித்துப் பல்வேறு ஆய்வுகள் நடைபெற்றுள்ளன; நடைபெற்று வருகின்றன.

டைஸ் என்னும் இலத்தீன் சொல்லுக்கு நாள் என்பது பொருள்.
இதிலிருந்தே டைரியம் என்னும் இலத்தீன் சொல் உருவானது.
இச்சொல்லுக்கு நாட்குறிப்பு என்பது பொருள்.
இதிலிருந்தே டைரி என்னும் ஆங்கிலச் சொல் உருவானது.

அருணாசலக் கவிராயர் தம் இராமநாடகத்தைத் திருவரங்கத்தில் அரங்கேற்றிய பின்னர், மீண்டும் ஒருமுறை ஆனந்தரங்கர் முன்னிலையில் அரங்கேற்றினார் என்பது குறிப்பிடத்தக்கது.

“ஆனந்தரங்கருடைய நாட்குறிப்புகள் அவரது காலத்தில் யாருமே புரிந்திராத அரியதொரு இலக்கியப் பணி.” – கே.கே. பிள்ளை

“தான் நேரில் கண்டும் கேட்டும் அறிந்துள்ள செய்திகளைச் சித்திரகுப்தனைப்போல் ஒன்றுவிடாமல் குறித்து வைத்துள்ளார்.” – வ.வே. சு.

**ஆனந்தரங்கர் குறித்து வெளிவந்துள்ள இலக்கியங்கள்:**

ஆனந்தரங்கக் கோவை – தியாகராச தேசிகர்
ஆனந்தரங்கன் தனிப்பாடல்கள்
கள்வன் நொண்டிச் சிந்து
ஆனந்தரங்கன் பிள்ளைத்தமிழ் – அரிமதி தென்னகன்
ஆனந்தரங்கர் புதினங்கள்
ஆனந்தரங்க விஜயசம்பு – சீனிவாசக்கவி ( வடமொழி )
ஆனந்தரங்க ராட்சந்தமு – கஸ்தூரிரங்கக்கவி ( தெலுங்கு )

## மாதிரி வினாக்கள்

### அ) புறவயவினாக்கள்

கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. ஆனந்தரங்கர் பிறந்த ஊர் ________________ .
2. ஆனந்தரங்கர் ________________ ஆகப் பணியாற்றினார்.
3. ஆனந்தரங்கரின் ஆசிரியர் பெயர் ________________ .
4. ஆனந்தரங்கர் தம் நாட்குறிப்பிற்கு இட்டபெயர்கள் ________________ , ________________ .

### ஆ) குறுவினாக்கள்

1. நாட்குறிப்பில் இடம்பெறவேண்டிய செய்திகள் யாவை ?
2. ஆனந்தரங்கர் எங்கு, எப்போது பிறந்தார் ?
3. ஆனந்தரங்கர் எத்தனை ஆண்டுகள் நாட்குறிப்பு எழுதினார் ?
4. ஆனந்தரங்கரின் நாட்குறிப்பின்படி அன்றைய பண்பாட்டுநிலையைக் கூறுக.

### இ) சிறுவினாக்கள்

1. ஆனந்தரங்கரின் நாட்குறிப்பில் எத்தகைய செய்திகள் இடம்பெற்றுள்ளன ?
2. கப்பல் வந்தபோது ஏற்பட்ட மனமகிழ்ச்சியைப் பற்றி ஆனந்தரங்கர் எவ்வாறு எழுதியுள்ளார் ?
3. ஆனந்தரங்கர் நாட்குறிப்பில் இடம்பெற்றுள்ள திருமண நிகழ்வைப் பற்றி எழுதுக.
4. ஆனந்தரங்கர் பெற்ற சிறப்புகள் யாவை ?

### ஒப்படைப்பு :

இந்த வாரக் கல்வி நிகழ்ச்சிகளைச் செய்தித்தாள்களிலிருந்து தொகுக்க.



# மு.வரதராசனாரின் கடிதம்

## தம்பிக்கு

அன்புள்ள எழில்,

ஆக்கவேலைமுறைகள் இன்ன இன்ன என்று வகுத்து அனுப்புமாறு எழுதியிருக்கிறாய், எழுதுவேன். அதற்குள் ஒன்று சொல்ல விரும்புகின்றேன்.

தமிழரிலே தனித்தனியே இவர் இவர் இப்படி உயர்ந்தார் என்று சொல்வது பழைமை. தமிழர்கள் கூடிக்கூடி இன்னது செய்து உயர்ந்தார்கள் என்று சொல்லும் நற்சொல்லே இனி வேண்டும். சேர்ந்து செயல் செய்து உயரும் வல்லமை தமிழருக்கு உண்டு என்பதை இனி உலகுக்கு உணர்த்த வேண்டும். தனியொருவரின் உயர்வு இனத்துக்கு என்ன நன்மை செய்யும்? தமிழ்ச்சமுதாயம் உயர வேண்டுமா? தனி ஒருவன் அதோ ஒரு தொழிற்சாலையைத் திறமையாக நடத்துகிறான் என்று சொல்லும் நிலை போதாது. தமிழர் பலர் கூடி நடத்தும் தொழிற்சாலை அதோ. திறமையாக நடத்தப்படுகிறது என்ற புகழ்நிலை வரவேண்டும்; வளர வேண்டும். அன்றுதான் தமிழர் சமுதாயம் உயர வழிபிறக்கும்.

இன்றுள்ள தமிழகத்தில் தனி மரங்களாகத் தமிழர் உயர்வதையே காண்கிறோம். தோப்பாகக் கூடி உயர்வதைக் காண்கிறோமா? இல்லையே! இது பெருங்குறை. ஒற்றுமை இல்லாமையே இதற்குக் காரணம் என்று உணர்கிறாயா? தமிழர் நான்குபேர் சேர்ந்து ஒரு மனமாய் ஒன்றை நடத்த முடியாது, நடத்தினாலும் அது நெடுங்காலம் நீடிக்காது என்ற பழிச்சொல் உன் செவிக்கு எட்டியிருக்குமே! பிரிக்கும் ஆற்றல் உண்டு. பிணைக்கும் ஆற்றல் இல்லை என்பதற்கு இதைவிடச் சான்று வேண்டுமா?

இனி, ஆக்கவேலை முறைகள் எவை என எனக்குத் தெரிந்தவற்றை எழுதுகிறேன்.

தமிழ் ஒன்றே தமிழரைப் பிணைத்து ஒற்றுமைப்படுத்தவல்லது. தமிழ் ஆட்சி மொழியாகவும் கல்வி மொழியாகவுமானால் தவிரத் தமிழுக்கு எதிர்காலம் இல்லை என நம்பு.ஆட்சிமொழி என்றால் சட்டசபைமுதல் நீதிமன்றம்வரையில் தமிழ் வழங்க வேண்டும்.

கல்விமொழி என்றால் எவ்வகைக் கல்லூரிகளிலும் எல்லாப் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்கவேண்டும். குறைகள் பல இருக்கலாம். குறைகளுக்குத் தயங்காமல் ஆட்சி மொழியாகவும் கல்விமொழியாகவும் ஆக்கவேண்டும் என்று உணர்ந்திடு. இவ்வாறு பேசிக்கொண்டிருந்தால் போதாது. உன்னால் ஆனவரை செய். கடிதம், பணவிடை, விளம்பரப்பலகை, விற்பனைச்சீட்டு முதலிய எல்லாம் தமிழிலேயே எழுதுக. இவற்றைத் தமிழில் எழுதினால் அஞ்சல் ஊழியர், வணிகர்களின், வாங்கும் மக்கள் முதலியவர்களைத் தமிழில் படிக்கச் செய்வதுபோல் ஆகும். இல்லையானால் அவர்கள் தமிழை மறக்கும்படி செய்வதுபோல் ஆகும்.

நீ யாருடனும் தமிழிலேயே பேசு. உலகத்தார் எல்லாம் அவரவர் தாய்மொழியில்தான் பேசுகின்றார்கள். தமிழ் தெரியாதவர்களிடத்தில் மட்டும் பிறமொழியில் பேசு. திருமண வழிபாடு முதலியவற்றைத் தமிழில் நடத்து.

சாதி சமய வேறுபாடுகளை மறக்கக் கற்றுக்கொள். மறக்க முடியாவிட்டால் புறக்கணிக்கக் கற்றுக்கொள். ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்ற செம்மொழியைப் போற்று.

நான்குபேர் சேர்ந்தால் அவர்களிடையே பண்பாலும் செயலாலும் கருத்தாலும் கொள்கையாலும்ஒற்றுமையும் உண்டு வேற்றுமையும் உண்டு. ஒற்றுமையான பகுதிகளை மட்டும் எடுத்துப்பேசு. வேற்றுமைப் பகுதிகள் இங்கு இப்போது வேண்டுவதில்லை என்று விட்டுவிடு. வேற்றுமைப் பகுதிகளை வற்புறுத்திப் பேசினால் பொதுவேலை நடக்காது; நம்பு.

வெளிநாட்டுத் துணியை மறுப்பதுபோலத் தமிழ்நாட்டுக்கும் தமிழ்மொழிக்கும் நன்மை செய்யாத செய்தித்தாள்களை விலக்கு. நாட்டுக்கும் மொழிக்கும் இடையூறான நிலையங்களைப் போற்றாதே, உன் காசு அவற்றிற்குப் போகாமல் காத்துக்கொள். நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் உடையவர் நடத்தும் உணவுவிடுதி, மருந்துக்கடை, துணிக்கடை முதலியன சிறிது தொலைவில் இருந்தாலும், விலை சிறிது கூடுதலாக இருந்தாலும், வேறு குறையிருந்தாலும், அங்கேயே சென்று வாங்கு. அவசரத்தின் காரணமாகவோ, வேறு காரணத்தாலோ, தவற நேர்ந்தால், தவறு என்று உணர்ந்து வருந்து. கூடிய வரையில் தமிழ்நாட்டில் தமிழ்த் தொழிலாளிகளால் செய்யப்பட்ட பொருள்களையே வாங்கு.

உன் மொழியையும் நாட்டையும் போற்றுவதற்காக மற்றவர்களின் மொழியையும் நாட்டையும் தூற்றாதே; பழிக்காதே; வெறுக்காதே; அயலானின் தாயைப்பழித்து வெறுக்காதே. அயலானின் தாயைப் பழித்து வெறுக்காமலே நம் தாயிடம் அன்பு செலுத்த முடியும். அத்தகைய அன்புதான் நிலையானது; நீடிப்பது.

தமிழர்களிடையே உள்ள பகை, பிரிவுகளை மேலும் வளர்க்கும் செயல்களைச் செய்யாதே; அத்தகைய சொற்களைச் சொல்லாதே; அவ்வாறான எண்ணங்களை எண்ணாதே. தமிழரிடையே ஒற்றுமை வளர்க்கும் சிந்தை சொல் செயல்களையே போற்று. சுவையாக இருந்தாலும் முன்னவையை நாடாதே. சுவையற்றிருந்தாலும் பின்னவையைப் போற்று. கொள்கைகளும் கட்சிகளும் இயக்கங்களும் நாட்டு மக்களின் நன்மைக்காகத் தோன்றியவை. ஆகவே, கொள்கைகள், கட்சிகள் இயக்கங்களைவிட நாட்டு மக்களின் நன்மையே பெரிது என்று உணர்.

தமிழ்நாடு உயரவேண்டும் என்றால் இங்குள்ள மலையும், காடும், நிலமும், நீரும் உயர்தல் அல்ல. இங்கு வாழும் யாவரும் ஒன்று என்று கருது. ஆகவே இந்நாட்டில் உள்ள வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம், பிச்சை எடுத்தல் முதலிய கொடுமைகள் ஒழியவேண்டும் என்று கருது. ஏழை என்றும் அடிமை என்றும் இல்லை என்று பாரதியார் கண்ட கனவைப் போற்று. வறியவர்களைக் காணும்போதெல்லாம் நினை.

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்னும் நல்ல நிலை வர வேண்டும். உலகம் ஒரு குடும்பமாகவாழ வேண்டும் என்று ஆர்வம் கொள். அந்த நிலை வந்தால், நாட்டுப்பற்று என்பது வேண்டாததாகிவிடும் என்று அறிந்துகொள். அதுவரையில் நம்நாட்டிற்கு நாம் செய்யவேண்டிய கடமை இருக்கிறது என்பதை மறவாதே.

ஊர்க்கெல்லாம் பொதுக்காவல் சிறந்தமுறையில் ஏற்படும் வரையில் ஒவ்வொருவரும் தம் வீட்டைத் தாழிட்டுக் காத்துக் கொள்ளவேண்டும் அல்லவா? அதுபோல, உலகத்திற்குப் பொதுவான ஒரு சிறந்த ஆட்சிமுறை ஏற்படும்வரையில், நம்நாட்டை நாம் தவறாமல் காத்துக் கொள்ளவேண்டும். அது குறுகிய நோக்கம் அன்று; இன்றியமையாத கடமை என்று உணர்ந்துகொள்.

உன் மானத்தைவிட நாட்டின் மானம் பெரியது என்று உணர். உன் உயர்வைவிட நாட்டின் உயர்வு இன்றியமையாதது என்று உணர், உன் நலத்தைவிட நாட்டின் நலம் சிறந்தது என்று உணர். நெருக்கடி நேரும்போது உன் நலம், உயர்வு, மானம் ஆகியவற்றை நாட்டுக்காக விட்டுக்கொடு. தலைமை உன்னைத் தேடிக்கொண்டு வந்தால் வரட்டும். நீ அதைத் தேடிக் கொண்டுபோய் அலையாதே. நீ தேட வேண்டுவது தொண்டு. தலைமை தாங்குவதும் ஒருவகைத் தொண்டுதான். தன்னலம் அற்றவர்க்கு அது பொறுப்பும் சிக்கலும் மிகுந்த தொண்டு. அத்தகைய தலைமைப் பொறுப்பு எப்போதாவது உன்னை நாடி வந்தால் ஏற்றுக்கொள். ஆனால், ‘தொண்டுக்கு முந்து, தலைமைக்குப் பிந்து’ என்பது உன் நெறியாக இருக்கட்டும்.

இந்த நாட்டில் சொன்னபடி செய்ய ஆள் இல்லை. ஆனால், கண்டபடி சொல்ல ஆள் ஏராளம். ஒவ்வொருவரும் ஆணை இடுவதற்கு விரும்புகிறார். ‘அடக்கி ஒழுகுவதற்கு யாரும் இல்லை. அதனால்தான் வீழ்ச்சி நேர்ந்தது’ என்கிறார் விவேகானந்தர். ஆகையால், பொதுநலத்திற்காகக் கட்டுப்படுதல், கீழ்ப்படிதல், தொண்டு செய்தல் இவற்றைப் பெருமையாகக் கொள். மேலும் நான் விரிவாக எழுதிக் கொண்டிருக்க வேண்டுவதில்லை. உனக்குப் போதிய அறிவும் திறமையும் இருக்கின்றன. அவற்றைத் தக்க வழியில் பயன்படுத்த வேண்டுமே என்பதுதான் என் கவலை. அதனால்தான் இவ்வளவு எழுதினேன்.

உன் அண்ணன்,

வளவன்

## மாதிரி வினாக்கள்

### நெடுவினாக்கள்

1. தாய்மொழி வளர்ச்சி பெற டாக்டர் மு.வ. கூறும் அறிவுரை யாது?
2. டாக்டர் மு.வ. நாட்டுப்பற்று, தலைமைப்பண்பு பற்றி யாது கூறுகிறார்?

# சொல் : பகாப்பதம், பகுபதம்

ஓர் எழுத்தானது தனித்தேனும், ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகள் தொடர்ந்தேனும் ஒரு பொருளை உணர்த்துமானால், சொல் எனப்படும்.

பதம், மொழி, கிளவி என்பன சொல் என்பதன் வேறு பெயர்கள். பதம் பகாப்பதம், பகுபதம் என இரு வகைப்படும்.

## பகாப்பதம் :

பிரித்தால் பொருள் தராத சொல் பகாப்பதம் எனப்படும். பெயர், வினை, இடை, உரி ஆகியவற்றின் அடிப்படையில் பகாப்பதம் நான்குவகைப்படும்.

1. பெயர்ப் பகாப்பதம் – மரம், நாய், நீர்
2. வினைப் பகாப்பதம் – உண், காண், எடு
3. இடைப் பகாப்பதம் – தில், மன், பிற
4. உரிப் பகாப்பதம் – சால, நனி, கடி, உறு

( இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பகாப்பதங்களாகவே இருக்கும். )

## பகுபதம் :

பகுதி, விகுதி, இடைநிலை எனப் பிரிக்கப்படும் பதம் பகுபதம் எனப்படும். ( பகுபதம் – பிரிக்கமுடிந்த பதம் ). பகுபதம் பெயர்ப்பகுபதம், வினைப்பகுபதம் என இருவகைப்படும்.

**பெயர்ப் பகுபதம் :** பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் எனும் ஆறின் அடியாகத் தோன்றுவது பெயர்ப்பகுபதம்.

(எ–டு): 1. பொன்னன் = பொன் + ன் + அன் ( ன் – இரட்டித்தது )
பொன் என்னும் பொருட்பெயர் அடியாகப் பிறந்தது.

2. ஊரன் = ஊர் + அன்
ஊர் என்னும் இடப்பெயர் அடியாகப்பிறந்தது.

3. ஆதிரையான் = ஆதிரை + ய் +ஆன் ( ய் – உடம்படுமெய் )
ஆதிரை என்னும் காலப்பெயர் அடியாகப் பிறந்தது.

4. கண்ணன் = கண் + ண் + அன் ( ண்– இரட்டித்தது )
கண் என்னும் சினைப்பெயர் அடியாகப் பிறந்தது.

5. கரியன் = கருமை + அன்
கருமை என்னும் பண்புப்பெயர் அடியாகப் பிறந்தது.

6. நடிகன் = ( நடி + க் +அன் ) – ( க் – பெயரிடைநிலை )
நடித்தல் என்னும் தொழிற்பெயர் அடியாகப் பிறந்தது.

